


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

## மனச் சான்று

தீமையை நோக்கியே தாவிடு தேஎன்றன்
சின்ன மனக்குரங்கு — சலனத்
தீய மனக்குரங்கு — கொஞ்சம்
தாமதம் நேர்ந்திடில் என்னென்ன நேருமோ
தாழ்வில் மனம்வீழுமோ? — துயரச்
சூழல் எனைத்தழுவ!

ஆழி அலையும் எறிகையி லேநெஞ்சை
அச்சம் நடுக்கையிலே — சுற்றி
ஆபத்தும் சூழ்கையிலே — உயிர்
ஆழக் கடலுக்குள் மூழ்கையில் ஓர்தோணி
ஆடி அசைந்துவரும் — மனம்
ஆனந்தத் தேன் சொரிய!

தீமையை நோக்கி அமிழ்ந்திடும் நெஞ்சுளோர்
தெய்வத் துணையும் எழும் — ஞானச்
சேதிபல் கோடிசொலும் — உளம்
தூய்மையை நோக்கி நடந்திடுமே அந்தத்
தோன்ருத் துணை யெதுவோ — மனச்
சான்றெனும் தெய்வமன்ரூ?

-- சே. கனகசபை

## பரம்பிக்குளம் திட்டம்



### பொறுமையாயிருந்து நலம் பெறுவோம்

பரம்பிக்குளம் நீர்ப் பாசனத் திட்டம் பற்றி கேரளப் பத்திரிக்கைகளின் புரளிகளை நம்பவேண்டாம்; விரைவில் அத்திட்டம் அமுலுக்கு வருவது நிச்சயம்.

அதற்கு முன்னதாக கேரளாவின் புதிய ஆட்சியினர் அத்திட்டத்தின் மூலம் கேரளாவுக்கு எள்ளளவேனும் பாதகம் ஏற்படுமா, அங்கு நீரை எவ்வளவு தூரம் அதிகமாகப் பயன்படுத்தக் கூடும் என்று சந்தேகமறத் தெரிந்து கொள்ளுவதற்குப் பரிசீலனை செய்து வருகின்றனர்.

இத் திட்டத்தில் தமிழ் நாட்டுக்கு கேரளாவில் பாயும் நதிகள் மூலம்தான் நீர் கொண்டுவர வேண்டியுள்ளது. எனவே நாம் சற்று பொறுமையுடன் இருந்து திட்டத்தை அமுல்படுத்த வேண்டும்.

கேரளப் பத்திரிகைகள் சில தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் விடக் கூடாதென எழுதுகின்றன. ஆயினும் நாம் ஒரு சிறிதும் அதற்காக கோபப்பட்டுக் கொள்ளக் கூடாது. தமிழ்நாட்டு பத்திரிகைகள் கூடத்தான் தமிழகத்திலிருந்து கேரள நாட்டுக்கு அரிசி அனுப்புவதைத் தடை செய்ய வேண்டும் என்று சில சமயம் எழுதி வருகின்றன.

இரு நாடுகளுக்கும் பாதகமில்லாத வகையில் காரியம் நிறைவேற்றுவதே நமது குறியாக வேண்டும்; அதுவரை பொறுமையாக இருக்க வேண்டும்.

- திரு. கே. காமராஜ்

3—4—1960

# வௌவாலின் ரேடார்

## எழுதியது: பேச்சிமுத்து

வௌவாலாவது ரேடராவது என்கிறீர்களா? கட்டுரையைப் படியுங்கள்.

பறந்து திரிந்தாலும் கூட வௌவால், பறவை யினத்தைச் சேர்ந்ததல்ல என்பதும், அது குட்டி போட்டிப் பால் கொடுக்கும் (MAMMAL) இனத்தைச் சேர்ந்தது என்பதும் பலருக்கு வேடிக்கையாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அதுதான் என்பதைப் புரிந்துகொண்டால் நாம் வியப்படைய மாட்டோம். பறவைகளின் இறக்கைகளுக்கும், வௌவாலின் இறக்கைகளுக்கும் அமைப்பில் வேறுபாடு உண்டு. வௌவாலின் இறக்கை வெறும் தோலாலானது! பறவைகளின் இறக்கைகள இறகுகள் உள்ளன. இன்னும், வௌவால் வாயினாலேயே உண்ணுகிறது, வாயின் மூலமாகவே மலம் கழிக்கிறது என்று பலர் நம்பிக்கொண்டிருக்கின்றனர். இதையும் ஒப்புக் கொள்ளுவதற்கில்லை. ஏனெனில், அதற்கு வாயிருப்பதைப் போலவே தனியாக ஆசனவாயும் (Anus) இருக்கிறது. எனவே அந்த "ஒருவழி"க் கொள்கைக்கு ஆதாரமில்லை

வௌவால்களில் இரண்டு வகை உள்ளன. பார்ப்பதற்குப் பெரிய அளவில் உள்ளவை 'கனி தின்னி' (Frugivorous) வௌவால்கள். இவை பெரும்பாலும் பழ மரங்கள் நிறைந்த பகுதிகளிலேயே காணப்படும். மற்றொரு வகை, பூச்சிகளையே உணவாகக் கொண்டு (Insectivorous) வாழ்பவை. இவை சிறியனவாக இருக்கும். பூச்சி உண்ணும் வௌவால்கள் சில சமயங்களில் பூச்சிகளைத் தொடர்ந்து விரட்டிக் கொண்டு வரும்போது வீடுகளுக்குள்ளேயும் வந்துவிடும்.

இவ்விருவகை வௌவால்களுக்குள் குறிப்பிடத்தக்க வேறு சில வேறுபாடுகளும் இருக்கின்றன. பூச்சி உண்ணும் வௌவால்களுக்கு மூக்கில் இலை போன்ற அமைப்புள்ள சில மடிப்புகள் (Nose leaves) உள்ளன; கனிதின்னி வௌவால்களுக்கு இவையில்லை.

இவை தவிர தென் அமெரிக்கக் காடுகள் சிலவற்றிலும் உலகின் வேறு சில பகுதிகளிலும் இரத்தம் குடிக்கும் இராட்சச வௌவால்கள் (Vampires) இருக்கின்றன இவற்றிற்கு மனிதர்களும், கால்நடைகளும் பெருவாரியாகப் பலியாகின்றனர்.

உறங்குகிற மனிதன் அல்லது கால்நடையின் கழுத்தில் தனது கூர்மையான உளிப் பற்களால் ஆழமாகக் கடித்து, காயத்திலிருந்து வரும் இரத்தத்தை வேண்டுமளவு உறிஞ்சிக் குடித்துவிட்டு இவ்வௌவால் பறந்து போய் விடும். காயத்திலிருந்து வெளிவரும் இரத்தம் உறைந்து போகாமல் இருப்பதற்காக வௌவால் தன் உமிழ்நீரைக் காயத்தில் உமிழ்ந்துகொண்டிருக்கும். கடிக்கப்படும் மனிதனுக்கோ, விலங்குக்கோ வௌவால் தன்னைக் கடிப்பதே தெரியாது. மருத்துவர் மரமரப்பு (Local anaesthetic) ஊசி போட்டபின் கத்தியால் அறுக்கும்போது நோயாளிக்கு வலி தெரியாதது போலவே உமிழ் நீரால் உணர்வில்லாமல் ஆக்கிவிடுகிறது இவ்வௌவால்.

குறுக்கும் நெடுக்குமாக இலைகளும், மரக் கிளைகளும் அடர்ந்துள்ள, மிகவும் இடைஞ்சலான குறுகிய வழிகளிலும் எத்தகைய இருட்டிலும் வௌவால் மிக விரைவாகப் பறக்கவல்லது. அது அவ்விதம் பறக்கும்போது எதிலும் மோதிக் கொள்ளுவதில்லை. கண்கள் நன்றாகத் தெரிவதால்தான் இது இயலுகிறது என்று நினைக்கலாம். ஆனால் கண்களை மறைத்துவிட்டாலும், குருடாக்கிய பிறகும் கூட அதனால் நன்றாகப் பறக்க முடிகிறது. இது எவ்வாறு இயலுகிறது?

ஒளி அலைகளை நாம் காண்கிறோம்; ஆனால் எக்ஸ்-ரே போன்ற ஒளி அலைகள் நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதே போல, நம் செவிகளுக்குப் புலனாகாத ஒலி அலைகளும் (Soundwaves) இருக்கின்றன. இவற்றை நம் செவிக்குக் "கேட்க இயலாத" (Ultra-sonic) ஒலி அலைகள் என்பர். ரேடியோ அலைகளும் இவ்வகையைச் சேர்ந்தவை. நம் செவிக்கு எட்டாத இந்த (Ultra sonic) அலைகளை வௌவால்கள் பயன்படுத்துகின்றன. இவ்வலைகளை வாயினால் உண்டாக்கவும், அவற்றைச் செவியின் மூலம் உணர்ந்துகொள்ளவும் இயலும்.

வௌவால் பறக்கும் போது இவ்வலைகளை உண்டாக்கிக் கொண்டே செல்லும்; தொடர்ச்சியாக அலைகளை வெளிப்படுத்தாமல், விட்டுவிட்டு வெளிப்படுத்தும். ஏதேனும் மரக் கிளைகள், கட்டடங்கள் மீது அலைகள் மோதினால் உடனடியாக திரும்பி வருகின்றன (Reflected) பட்டுத் திரும்பிய அலைகள் வௌவாலின் செவியில் விழுந்ததும், வௌவால் எதிலும் மோதிக்கொள்ளாத வண்ணம் தனது பாதையை மாற்றிக் கொள்ளும். அனுப்பிய ஒலி அலைகள் வௌவாலிடம் திரும்பி வரவில்லையானால், தடையேதும் இல்லாததை அறிந்து, வௌவால் தான் செல்லும் பாதையிலேயே தொடர்ந்து செல்லும்.

இந்தத் தத்துவத்தின் அடிப்படையிலேயே (Radar) கண்டுபிடிக்கப்பட்டிருக்குமோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ரேடார் என்பது ரேடியோ அலைகளைக் கொண்டு, ஒரு பொருள் இருப்பதையும், அது இருக்கும் தூரத்தையும் கண்டுபிடிக்கும் (Radio Detection and Ranging) கருவியாகும்.

ரேடியோ அலைகளை உற்பத்தி செய்து எல்லா திசைகளிலும் பரப்புகிறது இந்தக் கருவி. விமானம போன்ற ஏதேனும் ஒன்றின் மீது மோதினால், மோதிய வேகத்திலேயே இவ்வலைகள் புறப்பட்ட இடத்திற்குத் திரும்பி வந்துவிடுகின்றன. அலைகள் திரும்பிவந்த திசையையும், திரும்பி வருவதற்கு ஆன நேரத்தையும் வைத்துக் கொண்டு, இன்ன திசையில், இவ்வளவு தூரத்தில், ஒரு தடை (Obstacle) இருக்கிறது என்பதைக் கணக்கிட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

இருள் சூழ்ந்திருக்கும் போது விமானங்கள் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளாமல் தடுப்பதற்கு அவ்விமானங்களில் சமீபகாலமாக ரேடார்கள் பொருத்தப்பட்டு வருகின்றன. பனி மூட்டத்தினாலோ இருளாலோ, கப்பல் போக்குவரத்துக்கு ஏற்படயிருக்கிற பேராபத்துக்கள் ரேடார்களால் தவிர்க்கப்படுகின்றன.

மனிதன் விஞ்ஞான ஆராய்ச்சியால் இவ்வளவு காலந்தாழ்த்திக் கண்டுபிடித்துப் பயன்படுத்தி வருகிற ரேடாரைப் போலவே, இயற்கையாகத் தம் உடல் அமைப்பில் அமைந்த சாதனங்களின் உதவியால் வௌவால்கள் பன்னெடுங் காலமாகப் போக்குவரத்தை நிகழ்த்தி வருவது இயற்கையின் விந்தையை நினைந்து நம்மை வியப்படையச் செய்யவில்லையா?

### எழுத்தாளர்களுக்கு

'சிவாஜி'க்கு கதை, கவிதை, கட்டுரைகள் எழுதுவோர் தெளிவாக சுருக்கமாக காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

ஆசிரியர்



சிவாஜி
ஆண்டு சந்தா ரூ. 5-0

# செய்தித் திரட்டு

### திருவானைக் கோவிலில் ஜகத்குரு

பதினேழு ஆண்டுகளுக்குப் பிறகு, காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசார்ய சுவாமிகள் மார்ச் 26-ந் தேதி திருச்சிக்கு விஜயம் செய்திருக்கிறார். கொள்ளிடம் பாலத் தென் கோடியில் ஏராளமான பக்தகோடிகளும், பதவி ஓய்வு பெற்றுள்ள திருச்சி மாவட்ட நீதிபதி திரு. எல்.எஸ். பார்த்தசாரதி ஐயரும் வரவேற்புக் குழுவினரும் கூடியிருந்து ஸ்ரீஆசார்ய சுவாமிகளை வரவேற்றனர்.

திருவானைக்கோவில் ஸ்ரீ ஜம்புகேஸ்வரர் தேவஸ்தான சார்பில் பூர்ண கும்ப மரியாதைகள் வழங்கப்பெற்றன. வேத பாராயணங்கள் முழங்கின. சுவாமிகள் பக்தகோடிகளுக்கு தரிசனம் தந்து ஆசி கூறினர்.

திருவானைக்கோவிலில் சுவாமிகள் பட்டணப் பிரவேசம் ஆனதும் பல்லக்கில் ஏறி முக்கிய தெருக்கள் வழியே பவனி வந்தார்.

வசந்த நவராத்திரி உத்சவத்தை சுவாமிகள் ஆரம்பித்து நடத்திவருகிறார்.

ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி கோவில் குடமுழுக்கு விழா ஏப்ரல் 6-ந்தேதி நடைபெறும். அதுவரை சுவாமிகள் சங்கர மடத்தில் தங்கியிருப்பார்

### ஐந்தாண்டுத் திட்டக் கண்காட்சி

இந்திய அரசாங்க செய்தி, ஒலிபரப்புத்துறையினரால் திருச்சி நகர மண்டபத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள ஐந்தாண்டுத் திட்டக் கண்காட்சியை திருச்சி மாவட்ட கலெக்டர் ஜனாப் கே. எம். பாட்சா மார்ச் 25-ந் தேதி மாலை ஆரம்பித்து வைத்தார். கண்காட்சியை ஆரம்பித்துவைத்து அவர் பேசுகையில், 'இரண்டு திட்ட காலங்களில் இந்நாடு அடைந்துள்ள முன்னேற்றத்தை இப்பொருட்காட்சி காட்டுகிறது' என்றார்.

திருச்சி வானொலி நிலைய அதிகாரி திரு. பி. [illegible] தமது தலைமைச் சொற்பொழிவில் ஐந்தாண்டுத் திட்டங்களால் விவசாயம், குடிசைத் தொழில், பாசனம் ஆகிய பல்வேறு துறைகளில் இந்நாடு அடைந்துள்ள முன்னேற்றத்தை எடுத்துரைத்தார்.

பொருட்காட்சி அதிகாரி திரு. ரெங்கா ரெட்டி எல்லோரையும் வரவேற்றுப் பேசினர். ஐந்தாண்டுத் திட்டப் பிரச்சார அதிகாரி திரு. தனபாண்டியன் நன்றி கூறினர்.

### தமிழகப் புலவர் குழு ஐந்தாவது கூட்டம்

தமிழகப் புலவர் குழுவின் 5-வது கூட்டம் ஏப்ரல் 17-ம் தேதி அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் நடைபெறும். விழாவை செட்டிநாடு ராஜா முத்தையா செட்டியார், எம்.எல்.ஏ. அவர்கள் துவக்கிவைப்பார். பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை புலவர்களை வரவேற்பார்.

### தமிழ்க் கவிதைக்குப் புதுச் செல்வம்

'திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்' என்று கூறினர் மகாகவி பாரதியார். பாரதியின் இந்த வாக்குக்கு அவரே சிறந்த இலக்கியமாக விளங்குகிறார் என்பதை வலியுறுத்தும் முறையில் ஒரு செய்தி வெளியாகியிருக்கிறது.

அண்மையில் லெனின்கிராடில் நடைபெற்ற கீழ்த்திசை நாட்டு ஆராய்ச்சி நிலையத்தின் கூட்டமொன்றில் திரு. இரினுசிமிர் நோவா என்பார் பேசுகையில், 'பாரதியாரின் பாடல்கள் தமிழ்க் கவிதைக்குப் புதுச் செல்வமாகும்' என்று குறிப்பிட்டார்.

### ஆங்கில — தமிழ் அகராதி

சென்னை பல்கலைக் கழகம் மேற்கொண்டுள்ள ஆங்கில—தமிழ் அகராதித்தயாரிப்பு வேலை விரைந்து நடைபெறுகிறது. சென்ற மாதத்துடன் சுமார் 13,500 ஆங்கிலச் சொற்களுக்கு [illegible] பொருள் கொடுக்கும் வேலை முடிந்திருக்கிறது. இந்த அகராதி மூன்று பாகங்களில் வெளியிடப்படும் என்றும், அச்சடிக்கும் வேலை விரைவில் ஆரம்பமாகும் என்றும் கூறப்படுகிறது.

### தமிழ் — ரஷ்ய அகராதி

சோவியத் யூனியனில் தமிழ்-ரஷ்ய அகராதி ஒன்று தயாராவதாக டாஸ் செய்தி நிறுவனம் தெரிவித்திருக்கிறது. லெனின்கிராடில் நடைபெற்ற கீழ்த்திசை நாட்டு ஆராய்ச்சி நிலையக் கூட்டத்தில் இத்தகவல் தெரிவிக்கப்பட்டது.

### பெங்களூரில் கடிகாரத் தொழிற்சாலை

ஜப்பானியக் கம்பெனி ஒன்றின் உதவியுடன் இந்திய அரசாங்கம் பெங்களூரில் கைக் கடிகாரத் தொழிற்சாலை ஒன்றை அமைப்பதற்கான ஒப்பந்தம் கையெழுத்தாகிவிட்டது.

மலிவான நடுத்தர விலையுள்ள கடிகாரங்கள் இங்கு தயாரிக்கப்படும். 1962-ல் உற்பத்தி ஆரம்பமாகும்.

### டெலி பிரிண்டர் தொழிற்சாலை

அரசியலார், தனியார் துறைகளில் உபயோகிப்பதற்காக ஆண்டு ஒன்றுக்கு ஆயிரம் டெலிபிரிண்டர்களையும், மற்றும் தொடர்புடைய இயந்திர சாமான்களையும் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலையை நிறுவ இந்திய அரசியலார் முடிவு செய்துள்ளதாக மத்திய அரசாங்க அமைச்சர் டாக்டர் பி.சுப்பராயன் தெரிவித்தார்.

### தூங்கும் வசதியுள்ள ரயில் பெட்டிகள்

பொன்மலையில் உள்ள ரயில்வே தொழிற்சாலையில், தூங்கும் வசதியுள்ள மூன்றும் வகுப்புப் பிரயாணிகள் பெட்டிகள் தயாரிக்கப்படும்என்றும், பெட்டி ஒன்று ஒன்றரை லட்சம் ரூபாய் பிடிக்கும் என்றும் தெரிகிறது.

தேசீய ரயில்வே பிரயாணிகள் சங்கத் தூதுக் குழுவினர் திருச்சிக்கு வந்து உதவி பிரதம மெகானிக்கல் எஞ்சினீயருடன் கலந்து பேசி இதற்கான ஏற்பாடுகளைச் செய்திருக்கின்றனர்.

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே.

ஒூ 25 ] 3-4-1960 [ வாரம் 22

## எல்லைமீட்டார் சிவஞானத் தணிகை கொண்டார்

ஜெயங்கொண்டார், கங்கை கொண்டார் என்ற சிறப்புப் பெயர் பெற்ற வரலாற்றுத் தமிழரசர் வரிசையில் நமது ம. பொ. சி. அவர்கள் இனிமேல் **'எல்லை மீட்டார் சிவஞானத் தணிகை கொண்டார்'** என்ற தனிச்சிறப்புத் தமிழரசர் ஆகிறார்.

தமிழ்க் கலை, தமிழ்ப் பண்பு, தமிழ் இலக்கியம் இவற்றுடன் தமிழக எல்லை காக்கும் முன்னணிப் படையின் தளபதியாக விளங்கும் சிவஞானம் அவர்கள் இடையருது ஆற்றிய பெரும்பணி, நமது தேசீய அரசினரின் பேராதரவுடன் இன்று நற்பயன் அளித்து, விட்டுப் பிரிந்த தணிகை மீட்கப்பட்டிருக்கிறது.

வடவேங்கடம் என்ற நம் உரிமைக் கனவு மறைந்து போன ஒன்றல்ல என்பதையும் கிடைத்த ஒருபடியில் காலூன்றிக் கொண்டு தொடர்ந்து முன்னேறுவதற்கான ஒரு லட்சியக் கோடாக வேங்கடம் விளங்குமென்பதையும் அவர் குறிப்பிட்டிருப்பது நன்று. சிவஞானத்தின் பரம்பரையினரும் தணிகை கொண்டார் என்ற பட்டப் பெயரோடு விளங்குவார்களாக என்று வாழ்த்தி நமது பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இடைக்காலத்தே நம்மை விட்டுப் பிரிந்திருந்து, இப்போது மீண்டும் நம்மோடு வந்து இணைந்துள்ள திருத்தணி மக்களை நமது அன்புச் சகோதரர்களை இதயப் பூரிப்போடு வரவேற்கிறோம்.

ஏப்ரல் முதல் நாள் - பிரிந்தவர் கூடும் இப் பெருநாள் ஒரு கோலாகலத் திருநாளாகவே நடைபெற்றிருக்கிறது. ஆம். பண்டுதொட்டு நம்மோடு இணைந்து கலந்து வாழ்ந்த நம்முடைய சகோதரர்கள், இடையே 'மூளைத்த' மாநில அமைப்புக் காரணமாகப் பிரிக்கப் பட்டார்கள். திங்களும் செங்கதிரும் வெவ்வேறு புறத்தே தங்கியிருந்தாலும் ஒட்டுறவு விட்டுப்போகாத 'ஒளியுறவு' போல, இடையே 'மூளைத்த' மாநில அமைப்புக் காரணமாக நமது அருமைச் சகோதரர்களும் நாமும் இடைக்காலத்தே பிரித்து வைக்கப்பட்டிருந்தாலும் இருவர்க்குமிடையேயுள்ள 'அன்புறவு' - உள்ளத்து உறவு எள்ளளவும் குறையவில்லை - பிரிந்தவர் கூடும் பெருநாளை ஆவலோடு எதிர்பார்த்துக் கூடிக்கொண் ...

பிரிந்து சென்ற தமிழ்ப் பகுதிகளை மீண்டும் நம்மோடு இணைப்பதற்கான போராட்டத்தில் திரு. சிவஞானம் அவர்கள் முழுமூச்சுடன் ஈடுபட்டிருந்ததைத் தமிழர்கள் மறக்க முடியாது. திரு. சிவஞானம் அவர்கள் துவக்கி நடத்திய போராட்டத்தின் விளைவாக, தகராறைத் தீர்த்து வைப்பதற்காக — ஆராய்ந்து முடிவு கூறுவதற்காக படாஸ்கர் தலைமையில் ஒரு குழுவை நியமித்தது மத்திய அரசாங்கம். அந்தக் குழு பிரச்னைகளை ஆராய்ந்து, "தமிழகத்தின் வடக்கு எல்லை (இடைக் காலத்தில் பிரிக்கப்பட்டது) தமிழகத்தோடு மீண்டும் இணைக்கப்பட வேண்டியது தான்; பிரிக்கப்பட்ட தமிழர்கள் இணைந்து வாழ வேண்டியவர்களே" என்று தனது நியாயமான தீர்ப்பை வழங்கியிருக்கிறது. அதற்காக அக்குழுவைப் பாராட்டுகிறோம்.

குழுவின் தீர்ப்புப்படி, "முத்தமிழால் வைதோரையும் வாழ வைக்கும்" முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளுள் ஒன்றான திருத்தணி உள்பட 465 சதுர மைல் பரப்புள்ள 318 கிராமங்கள் தமிழகத்தோடு இணைக்கப்பட்டுள்ளன; நமது இரண்டு லட்சத்து 40 ஆயிரம் அருமைச் சகோதரர்கள் மீண்டும் நம்மோடு வந்து சேர்ந்துள்ளனர். இடைக்காலத்தே நம்மோடு இணைக்கப்பட்ட 326 மைல் பரப்புள்ள 148 கிராமங்கள் ஆந்திராவோடு இணைகின்றன; அவற்றில் வாழும் ஆந்திரச் சகோதரர்களும் பிரிந்து 'அவர்களோடு' சேர்கிறார்கள். வருகின்ற நமது அருமைச் சகோதரர்களுக்கு வரவேற்புக் கூறி, பிரிந்து செல்லும் ஆந்திரச் சகோதரர்களுக்கு வழியனுப்புக் கூறுகிறோம்.

---

## லண்டன் - டில்லி பஸ் சர்வீஸ்

பலதேச பஸ்சர்வீஸ் ஒன்று ஏப்ரல் இறுதியில் ஆரம்பமாக விருக்கிறது. லண்டன் - லாகூர் டில்லியை இணைக்கும் இதன் கட்டணம் விமானக் கட்டணத்தில் பாதியாக இருக்கும்.

முதல் பஸ் ஏப். 28ந் தேதி லண்டனிலிருந்தும் 31-ந் தேதி லாகூரிலிருந்தும் புறப்படும். மத்திய கிழக்கு இந்தியாவை இணைக்கும் முதல் வெளிநாட்டு பஸ் இதுதான்.

இந்த பஸ் பெல்ஜியம், ஜெர்மனி, ஆஸ்டிரியா, யுகோஸ்லாவியா, பல்கேரியா, துருக்கி, ஈரான் நாடுகள் வழியே செல்லும்.

## பரிசுப் பத்திரங்கள்

வட்டியில்லாத ஐந்து வருட பரிசுப் பத்திரங்கள் ஏப்ரல் முதல் தேதியிலிருந்து நாடெங்கும் விற்பனையாகிறது.

பரிசுப் பத்திரங்கள் ரூ. 100, ரூ. 5 ஆகிய மதிப்புகளில் உள்ளன. இப் பரிசுப்பத்திரங்களைக் கொடுத்து யாரும் பணத்தைத் திரும்பப்பெறமுடியும். இதற்கென மனுஎதுவும் தேவையில்லை. இவற்றிற்கு வட்டி கிடையாது.

பரிசளிப்புக்காக மூன்று மாதங்கட்கு ஒருமுறை சீட்டுக் குலுக்கப்படும். முதல் சீட்டுக் குலுக்கல் 1960 செப்டம்பர் முதல்நாள் நடைபெறும். கடைசியாக 19-வது தடவையான சீட்டு 1965 மார்ச் முதல்நாள் நடைபெறும்.

## 'மெட்ரிக்' முறை

இந்திய ரயில்வே வர்த்தக இலாகாக்கள் ஏப்ரல் முதல் நாளிலிருந்து மெட்ரிக் நிறுவை அளவு முறைகளுக்கு மாற்றியுள்ளனர்.

எளிதாக்கப்பட்ட மாற்றுப்பட்டியல் நாடுமுழுவதிலுமுள்ள ரயில்வே நிலையங்களுக்கு விநியோகிக்கப்பட்டுள்ளது. மாற்றுப் பட்டியல் உதவியோடு மெட்ரிக் அளவில்இன்வாய்ஸ்களை ரயில்வே ஊழியர்கள் வழங்குவார்கள்.

# தெற்கு தேய்கிறதா?

'தெற்கு தேய்கிறது – வடக்கு வளர்கிறது' என்ற கூச்சலில் பொருளில்லை; தெற்கு தேயவில்லை — வளர்கிறது' எனக் கூறு கிறது தி. க. நாளிதழான "விடுதலை"

"வடக்கு என்ற சொல்லுக்கு மோனையாக 'வாழ்கிறது' என்று சொல்வதிலாவது சிறிது பொருளிருக்கிறது; ஆனால் 'தெற்கு' என்ற சொல்லுக்கு மோனையாக "தேய்கிறது" என்று கூறுவதில் பொருளிருக்கிறதா என்பதைக் கவனிப்போம்.

வடநாட்டிலும்கூட எல்லா மாவட்டங்களும் 'வாழ' வில்லை. பம்பாய் நன்றாக வழ்கிறது; பஞ்சாப் ஓரளவுக்கு வாழ்கிறது. மற்ற மாநிலங்கள் ஏதோ இரண்டொரு துறையில்தான் 'வாழ்' கின்றன.

இதேபோல் 'தென்னாடு தேய்கிறது' என்றால், திராவிடநாடு தேய்கிறது என்றுதானே பொருள்? திராவிடநாட்டில் எது தேய்கிறது? இயந்திர உற்பத்தியிலும், தொழிற்சாலைகளிலும், கனிப்பொருளிலும் நீர்வளத்திலும் இந்தியாவிலேயே முன்னணி மாநிலமாக இருக்கின்ற மைசூர் தேய்கிறதா? அல்லது வற்றாத உயிர் ஆறுகள் ஓடுகின்ற இயற்கை வளம்படைத்த ஆந்திரம் தேய்கிறதா? அல்லது தென்னையும் கமுகும், வாழையும் மிளகும் வளர்ந்து கொழிக்கும் சோலை மாநிலமான மலையாளம் தேய்கிறதா?

தென்மண்டலம் அல்லது தென்னாடு, அல்லது திராவிட நாடு—என்பதில் "தேய்கிறது" என்று கூறப்படுவது தமிழ்நாடு ஒன்றுதான். எதனால் "தேய்கிறது"? தமிழ்நாட்டில் போதுமான நீர் வளமில்லாதபடியால் நிலவளமில்லை. தமிழ்நாட்டு ஆறுகள் மிகமிகச் சிறியவை. இவற்றின் ஒரு சொட்டுத்தண்ணீர்கூட வீணாக்கப்படுவதில்லை. மழையினால் நிரம்புகின்ற ஏரிகளும் குளங்களும், ஊற்றினால் கிடைக்கின்ற கிணறுகளும் குழாய்க் கிணறுகளும் தருகின்ற பாசன நீரைப் பால்போலக் கருதிச் சிக்கனமாகப் பயன்படுத்துகின்றனர் தமிழர்கள். தமிழ் நாட்டில் போதுமான மழை பெய்வதுமில்லை. கனிப்பொருள் உற்பத்திக்கும், தொழிற்சாலை வளர்ச்சிக்கும் தேவையான நிலக்கரி இல்லை இப்போதுதான் இம்முயற்சி நடந்துகொண்டிருக்கிறது.

இவ்வளவு இயற்கைக் குறைபாடுகளுக்கிடையிலுங்கூட, மின்சார உற்பத்தியிலும் இயந்திரத் தொழிற்சாலைகளிலும், உணவுப் பொருள் உற்பத்தியிலும், கல்வித் துறையிலும்—மற்றத் துறைகளிலும் தமிழ்நாடு புயல்வேகத்தில் முன்னேறிக் கொண்டிருக்கிறது. இந்தியாவிலேயே இரண்டாவது மாநிலமாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது. எதிர்கட்சிகளின் தொல்லையும், கலவரமும், வேலைநிறுத்தத் தூண்டுதலும் இல்லாதிருந்தால், ஆக்கவேலைகளில் எதிர்க்கட்சிகளின் ஆதரவுமிருந்தால், இன்னும் பல அரிய சாதனைகளைக்கூடக் காணமுடியும்.

தமிழ் நாட்டின் 'தேய்வு'க்கு அடிப்படைக் காரணம், ஆறுகளில்லாத குறை. இந்தக் குறையை இன்றுள்ள எதிர்க்கட்சிகளில் எந்தக் கட்சியினால் தீர்த்துவிட முடியுமென்பதே நம் கேள்வி. திரு. காமராசருக்குப் பதிலாக திரு. ஆச்சாரியோ, திரு. அண்ணாத்துரையோ, திரு. ஜீவானந்தமோ, அல்லது இம் மூவருமோ சேர்ந்து ஆட்சி நடத்தினால் மட்டும் கோதாவரி — கிருஷ்ணா ஆற்றுத் தண்ணீர் அடுத்த மாதமே கிடைத்துவிடுமா? பத்து நாளில் பரம்பிக்குளம் தண்ணீர் கிடைத்துவிடுமா? மாதம் மும்மாரி (முன்பு திரு. சத்தியமூர்த்தி அடிக்கடி கூறி வந்தது போல) பெய்யும்படி செய்ய முடியுமா? தரிசு நிலங்களைத் திடீரென்று விளைநிலங்களாக்கிவிட முடியுமா?

திராவிட நாட்டிலுள்ள மற்ற மொழி மாநிலங்களைக் காட்டிலும் தமிழ்நாடு நீர்வளத்தில் குறைந்திருந்த போதிலும்கூட இன்றைய ஆட்சியாளரும் அரசாங்க அதிகாரிகளும் [illegible]பட்டுத் திராவிடத்திலேயே தமிழ் நாடு தலைசிறந்த, நிலையான ஆட்சியுடன் விளங்குமாறு செய்து வருகின்றனர்.

இதைத் தமிழர்கள் நன்கு உணர்ந்தால், உணரும்படியாகச் செய்தால், எதிர்க் கட்சிகளின் விஷமப் பிரச்சாரத்துக்குச் செவி சாய்க்கமாட்டார்கள் என்பது உறுதி. ஆச்சாரியார் ஆட்சியில் இருந்ததைக் காட்டிலும் எல்லாத் துறைகளிலும் கடந்த ஐந்தாண்டுகளில் பத்து மடங்கு முன்னேறியிருக்கிறது தமிழ்நாடு. இதற்கான புள்ளி விவரங்களையும் ஆதாரங்களையும் பொதுமக்கள் நன்கு உணரவில்லை.

எதிர்க் கட்சிகளில் தொழிலாளிகளைத் தூண்டிவிட்டுக் கொண்டிருக்கிறது ஒரு கட்சி; முதலாளிகளுக்கு சாம்பிராணி போட்டு உடுக்கடித்துக் கொண்டிருக்கிறது மற்றொரு கட்சி; 'தெற்கு தேய்கிறது' என்று அடுக்கு மொழி கூறி ஏமாற்றிக்கொண்டிருக்கிறது இன்னொரு கட்சி.

சேலம் இரும்பையும், நெய்வேலி நிலக்கரியையும், தஞ்சை எண்ணெய் ஊற்றுக்களையும் நினைந்தவுடனே உருவாக்குவதென்றால் இது கவிஞனின் கதையல்ல; ஓவியனின் சித்திரமல்ல; எழுத்தாளனின் வர்ணனையல்ல; சினிமாத் துறையின் திரைப்படமல்ல.

தமிழ்நாட்டு மக்கள் மற்ற மாநிலங்களைப்போல — சிறப்பாக மலையாளிகளைப் போல – ஊக்கத்துடன், சோம்பலில்லாமல் உழைக்கவேண்டும்; பிறரை ஏமாற்றாமலும் வஞ்சிக்காமலும் பாடுபட வேண்டும், சுரண்டலுக்கும் லஞ்சத்துக்கும் இடமில்லாதபடி நடந்துகொள்ள வேண்டும்.

மீண்டும் கூறுகிறோம். "தென்னாடு" தேயவில்லை. அதைப்பற்றி மலையாளிகளோ, ஆந்திரரோ, கன்னடியரோ கவலைப்படவில்லை. தமிழ்நாட்டில்தான் இயற்கை வளம் போதவில்லை. இதைச் சீர்படுத்துவதற்கு எதிர்க் கட்சிக்காரர் எவராலும் முடியாது. ஆளும் கட்சிதான் செய்யவேண்டும். ஆளும் கட்சியில் திரு. காமராசரைவிடத் தகுதி பெற்றவர், வசதி பெற்றவர் செல்வாக்குப் பெற்றவர் வேறு யார் இருக்கிறார்கள் என்பதே நம் கேள்வி.

— விடுதலை
29-3-60

படித்தோம் ; சொல்லுகிறோம்.

## செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா?

செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? இயற்றியவர் சுவாமி சித்பவானந்தர். விலை 45 காசுகள். கிடைக்குமிடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் தபோவனப் பிரசுராலயம், திருப்பராய்த்துறை P. O. திருச்சி மாவட்டம்.

மரணத்திற்குபின் மனிதனின் நிலை — பற்றிய பிரச்னை ஒரு தீராத பிரச்னையாகவே இருந்து வருகிறது. இதற்கிடையே "செத்தவர்களோடு பேசுவது" என்ற புதிய இயக்கம் ஒன்று பிறந்து வளர்ந்து கொண்டிருக்கிறது. பாமரர்கள் மட்டுமல்ல படித்தவர்கள் எனப்படுவோரும் இந்தச் சதுரங்கத்தில் 'வட்டுக்காய்' களாகி உருளுவதும், உருட்டுவதும் மிக வருந்தத்தக்கதாகும்.

செத்தவர்கள் செய்தி அனுப்புவதாகச்சொல்லி, ஏதேதோ செய்து, எதை எதையோ எழுதி வெளியிட்டு நடமாடும் 'திருவாளர்கள்' மலிந்து காணப்படுகின்றனர். இந்நிலை நிச்சயமாக நாட்டுக்கு நல்லதல்ல. இந்த இழிநிலையிலி[...]ந்த கொடுமையிலிருந்து விடு[...] வழியில்லையா என்று பலர் [...]கித் தவித்திருக்கும் இந்த [...]ரத்தில் 'உய்தி உண்டு' என்று கூறுவதுபோல, ஆழ்ந்த புலமையும் அனுபவமும் உடைய அருளாளர் சுவாமி சித்பவானந்தர் அவர்கள், 'செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா?' என்ற நூலை ஆக்கியருளியிருக்கிறார்கள். சுவாமி சித்பவானந்தர் அவர்களின் எழுத்தும் சொல்லும் எளிமையும், தெளிவும், இணையற்ற உறுதியும் உடையவை. அத்திருத்தகு நல்லார், "செத்தவர்களோடு பேசுகின்ற தொத்து நோய்க்கு ஆட்பட்டு அவதியுறுகிறவர்களிடம் பரிவும் பாசமும் கொண்டு, பிரச்னையை நுணுக்கமாக அணுகி ஆய்ந்து ஆய்ந்து, இப் புத்தகத்தில் தெளிபடுத்தியிருக்கிறார்கள். வேனிற் காலத்துப் புதுப்புனல் போல இந்நூல் தக்க சமயத்திலே வெளிவந்திருக்கிறது என்றால் மிகையாகாது.

சுவாமிகள் அவர்கள் இந்நூலில் தாமே பல ஐயங்களை எழுப்பித் தக்கமுறையிலே அவற்றைத் தீர்த்தும் வைக்கிறார்கள். செத்தவர்களோடு பேச இயலும் என்கிற புரளியை நம்புகிறவர்களிடம் அந்தப் புரளியைப் பரப்புகிறவர்களிடம் சுவாமிகள் சில வினாக்களை எழுப்புகிறார்கள், மேலும் அவர்களைத் தெளிவுபெறச்செய்து உய்விப்பதற்காக எடுத்துக்காட்டாக,

"செத்தவர்கள் இப்பொழுது ஆற்றல் படைத்த சூக்ஷும சரீரத்தில் இருப்பதால் பூவுலகிலே எங்கு வேண்டுமானாலும் ஊடுருவிப் பாய்ந்து பூலோக விஷயங்கள் சிலவற்றை அவர்கள் உள்ளபடி நமக்குத் தெரிவிக்க முன்வரலாம். பூமியிலே எந்த இடத்தில் பொன், வெள்ளிச் சுரங்கங்கள் இருக்கின்றன, எவ்விடத்தில் மண்ணெண்ணெய் அகப்படும் இவைபோன்ற விவரங்களை உள்ளபடி அறிந்து நமக்குத் தெரிவிக்க அவர்களுக்கு இயலும், அப்படி அவர்கள் செய்வார்களாகில் அவர்கள்மீது நாம் உண்மையாக நம்பிக்கை வைக்கலாம். நம்மோடு தொடர்புகொள்ள அவாக்கொண்டிருக்கும் அவர்கள் நமக்குச் செய்யும் ஒப்புரவும் நல்ல கைங்கரியமும் ஆகும் அது''

(பக். 51)

"எந்த நாட்டுக்கு எந்த வேளையில் எத்தகைய நலம் அல்லது பொலம் வரப்போகிறது என்பதைச் செத்தவர்கள் முன்கூட்டியே விளக்குவார்களாகில் பிறகு அவர்கள் விளக்கத்துக்கு ஒப்ப உலக நிகழ்ச்சிகளும் அமையுமாகில் செத்தவர்கள் பேசுவதில் நாம் நம்பிக்கை வைக்கலாம்.''

(பக். 55)

"பூதவுடல் நீத்த ஜீவர்கள் திறமைவாய்ந்த சூக்ஷும தேகங்களோடு இருப்பது உண்மையாகில் அவர்கள் நம்மோடு தொடர்பு கொள்ள முயலுகிறார்களென்பது உண்மையாகில் நாம் கேட்டுள்ள இக் கேள்விகளுக்கு அவர்கள் பொருத்தமாக விடையளிக்க முடியும், விடைவராதிருக்கும் காலமெல்லாம் செத்தவர்கள் பேசுவது உண்மையல்லவென்றும், கருவி மனிதனுடைய மதிமயக்கத்தைச் செத்தவர் பேச்சு என்று நாம் தவறுதலாகப் பொருள் படுத்திவிட்டோம் என்றும் முடிவு கட்ட வேண்டும்!''

(பக். 61)

இவ்வாறு சொல்லிக்கொண்டே போகிறார்கள். சுவாமிகளின் தெள்ளிய கருத்தை ஒப்புக்கொள்வதன்றி மறுக்க வாய் ஏது? தமிழக மக்கள் ஒவ்வொருவரும் படித்து உய்யவேண்டிய இவ்வரிய நூலை ஆக்கி அருளிய சுவாமிகளுக்குத் தமிழகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

## தெரிந்துகொள்வீர்

### என்றன் — எந்தம்

எனது என்னுடைய என்ற கருத்தையுணர்த்த எந்தன் என்ற சொல்லைப் பலர் பயன்படுத்துகின்றனர். இச்சொல் தமிழ் மரபுக்கு ஒவ்வாத—பிழையான சொல் ஆகும். எந்தன் என்ற சொல், எம் தன் எனப் பிரியும். சொல் முதலில் பன்மையும் இறுதியில் ஒருமையும் சேர்த்து எழுதுவது சரியல்ல. எனவே, எம்முடைய என்பதை யுணர்த்த எந்தம் என்ற சொல்லையும், என்னுடைய என்பதை யுணர்த்த என்றன் என்ற சொல்லையும் பயன்படுத்துவதே சரியானது.

### அக்கறை — அக்கரை

அக்கறை—அக்கரை என்ற இரு வேறு சொற்களை ஒரு பொருளை யுணர்த்தும் பொருட்டுப் பிழைபடக் கையாள்வோர் பலர் உள்ளனர். எனினும், ஈடுபாடு, விழிப்பு, கவனம் என்ற பொருளை உணர்த்த அக்கறை என்றும், அந்தக் கரை என்பதையுணர்த்த அக்கரை என்றும் எழுதுவதே சரியானது.

### பட்டணம் — பட்டினம்

இவ்விருவேறு சொற்களும் ஒரே பொருளை உணர்த்துவன போல் தோன்றினாலும் இவ்விரு சொற்களுக்கும் பெருத்த வேறுபாடு உண்டு என்பதைப் பலர் அறியாமலேயே இச்சொற்களைப் பயன்படுத்துகின்றனர். கடற்கரை நகரைப் பட்டினம் என்றும், கடற்கரையில்லாத பெருநகரைப் பட்டணம் என்றும் வழங்குவதே சரியானது. எடுத்துக்காட்டாக, சென்னையைக் குறிக்கும்போது பட்டினம் என்றும், மதுரையைக்குறிக்கும்போது பட்டணம் என்றும் எழுதுவதைக் குறிப்பிடலாம்.

### தண்ணீர்-வெந்நீர்

'குடிக்கத் தண்ணீர் கொடுங்கள்,' என்று கேட்டதும் சுடுதண்ணீர் வேண்டுமா, பச்சைத்தண்ணீர் வேண்டுமா என்று கேட்கிறவர்கள் பலரை நாம் காண்கிறோம். தண்ணீர் என்றாலே குளிர்ந்த நீர் என்றுதான் பொருள்படும். எனவே பச்சைத்தண்ணீர் என்றோ குளிர்ந்த தண்ணீர் என்றோ, கூறவேண்டியதில்லை. சுடுகின்ற நீரை உணர்த்தச் சுடுநீர் என்றோ, வெந்நீர் (வெம்மை நீர்) என்றோ கூறுவதும், குளிர்ந்த நீரைத் "தண்ணீர்" என்று கூறுவதுமே மரபாகும்.

### தந்நலம்-தன்னலம்

இவ்விரு சொற்களுக்கும் உள்ள வேறுபாட்டை நன்றாக மனத்தில் பதித்துக்கொள்ள வேண்டும். தன் நலம் தன்னலம் எனவரும். இது ஒருமை. தம் நலம் என்பது தந்நலம் என வரும். இது பன்மை.

# எதிர்க் கட்சிகள்

**[முதலமைச்சர் திரு. காமராஜ் கருத்துரை]**

மதுரை திலகர் மைதானத்தில் மார்ச் 27ந் தேதி நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் சென்னை முதலமைச்சர் திரு. காமராஜ் எதிர்க்கட்சியினரின் பொய்ப்பிரச்சாரங்களை விளக்கிப் பேசுகையில் குறிப்பிட்ட கருத்துரைகள்:

'சுதந்திரம் அடைவதற்கு முன்னால் காங்கிரஸ் எந்தக் கொள்கையை மேற்கொண்டிருந்ததோ அந்தக் கொள்கைக்காகத்தான் இப்போது பாடுபட்டு வருகிறது.

கல்வியின்மை, வறுமை ஆகியவற்றை அறவே ஒழித்து, எத்தகைய சமூக, பொருளாதார பாகுபாடும் இன்றி ஒவ்வொருவருக்கும் உணவு, உடை உறையுள் ஆகியன கிடைக்கச்செய்ய காங்கிரஸ் கட்சி பாடுபட்டு வருகிறது. எல்லோருக்கும் இந்த அடிப்படையான தேவைகளை வழங்குதல் வேண்டும் என்பதே நாம் அறிந்துள்ள தருமம். இவையெல்லாம் எங்களுக்குத் தேவையில்லை என்று மக்கள் கூறினால் நாங்கள் பதவியிலிருந்து விலகிக்கொள்ளத் தயாராக இருக்கிறோம்.

ஃ ஃ

சொந்த நலன்கள் பாதிக்கப்படுகின்றனவே என்ற காரணத்தால்தான் சுதந்திரா கட்சி பீதியடைந்திருக்கிறது. தனிப்பட்டவர்களின் சுதந்திரத்தில் அரசாங்கம் தலையிடுகிறது என்று சொல்லி அதுமக்களை ஏமாற்றப் பார்க்கிறது.

ஓர் ஒழுங்குமுறையை ஏற்படுத்துவது தனியார் சுதந்திரத்தில் தலையிடுவதாகாது. கட்டுக்காவல் ஏதும் இல்லாதபடி கொள்ளை லாபமடிக்க ஒரு சிலரை அனுமதிப்பதைத் தருமம் என் ... சுதந்திரம் என்றும் ஒப்புக்கொள்ளமுடியாது. வறுமையையும் அறியாமையையும் போக்குவதைக் காட்டிலும் பெரிய தருமம் ஏதுமில்லை.

ஃ ஃ

காங்கிரஸ் கட்சி கம்யூனிஸ்ட் கொள்கையைத்தான் பின்பற்றிக்கொண்டிருக்கிறது என்று சுதந்திரா கட்சி ஒரு புகாரைக் கிளப்பிவிடுகிறது. ஏழைகளுக்கு நன்மை செய்வது கம்யூனிஸம் என்றால் அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும். அதற்காக நாங்கள் பயப்படவில்லை.

ஃ ஃ

கம்யூனிஸ்ட்கட்சி இங்கே ஆதரவு பெற்று வளர முடியாது. ஏனென்றால் ஜனநாயகத்திலோ, வோட்டுரிமையிலோ அக்கட்சிக்கு நம்பிக்கையில்லை.

தி. மு. கழகம் சீக்கிரத்தில் மறைந்துபோய்விடும். திராவிடநாடு கோரிக்கையை அடிப்படையாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்ட தி. மு. கழகம் சென்ற பொதுத் தேர்தல்களில் போட்டியிட்டபோது அதைக் கைவிட்டுவிட்டது.

சென்ற 15 ஆண்டுக் காலத்தில் சென்னை மாநிலம் இயற்கை வளங்களை முழுதும் பயன்படுத்திக் கொள்ள எப்படித் தவறிவிட்டது என்பதைக்காட்டும்படி தி. மு. கழகத்திற்கு நான் சவால் விடுக்கிறேன். இந்த மாநிலத்திற்குள் கிடைக்கும் இயற்கை வசதிகளை நாம் முழுக்க முழுக்கப் பயன்படுத்தியுள்ளோம்.

தி. மு. கழகம், கம்யூனிஸ்டுகளுடனும், சுதந்திரா கட்சியுடனும் கைகோத்துக் கொள்வது அவர்களுடைய பலவீனத்தையே காட்டுகிறது.

# The Trichinopoly Vysya Bank Ltd., Trichinopoly.

**Balance Sheet as**
**31st DECEMBER 195[illegible]**

| Previous year Rs. nP. | CAPITAL AND LIABILITIES | Amount Rs. nP. | Total Rs. nP. |
|---|---|---|---|
| | 1. CAPITAL | | |
| ,00,000 00 | Authorised Capital 4,000 Shares of Rs. 50 each ... | 2,00,000 00 | |
| 0,000 00 | Issued Capital 2,000 Shares of Rs 50 each ... | 1,00,000 00 | |
| 0,000 00 | Subscribed Capital 2,000 Shares of Rs. 50 each ... | 1,00,000 00 | |
| 350 00 | Amount called up at Rs. 50 per Share on 1987 Shares — Rs. 99,350 ... | | 1,00,000 00 |
| | Add: Forfeited shares reissued at Rs. 50 per share on 13 shares Rs. 650 | | |
| 325 00 | Forfeited share amount ... | | |
| ,675 00 | | | |
| | 2. RESERVE FUND AND OTHER RESERVES: | | |
| 4,329 71 | i. Reserve Fund ... | 58,485 21 | |
| 2,500 00 | ii. Building Fund ... | 2,500 00 | |
| 4,940 00 | iii. Security Depreciation Reserve ... | 3,500 00 | 64,485 21 |
| | 3. DEPOSITS AND OTHER ACCOUNTS: | | |
| 2,101 20 | i. Fixed Deposits ... | 6,72,606 45 | |
| | ii. Overdue Fixed Deposits ... | 29,000 00 | |
| ,776 24 | iii. Savings Bank Deposits ... | 63,454 45 | |
| ,089 18 | iv. Current Accounts ... | 30,816 13 | |
| ,803 72 | v. Provident Fund Deposits ... | 22,145 86 | |
| | vi. Staff Security Deposits ... | 9,000 00 | 8,27,022 89 |
| | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES, AGENTS, Etc. | | |
| | i In India Nil | | |
| | ii Outside India Nil | | |
| | PARTICULARS: | | |
| | i Secured (Stating nature of security) Nil | | |
| | ii Unsecured Nil | | |
| | 5. BILLS PAYABLE: ... | | |
| | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE (AS PER CONTRA): | | |
| | i Payable in India Nil | | |
| | ii Payable outside India Nil | | |
| | 7. OTHER LIABILITIES:— | | |
| 1,632 00 | i. Unpaid Dividends ... | 2,165 00 | |
| 302 76 | ii Auction Balance ... | 302 76 | |
| 626 58 | iii. Suspense ... | | |
| | iv. For Expenses ... | 340 01 | |
| 15,283 72 | v. Accrued Interest on Deposits ... | 15,776 84 | |
| | vi. Interest on overdue Fixed Deposits ... | 1,311 00 | |
| 523 57 | vii. Charity Fund ... | 498 57 | |
| Nil | viii. Provision for Income Tax ... | 170 75 | |
| 2,740 37 | ix. Provision for Bad Debts ... | 2,740 37 | |
| | x. Provision for Security Depreciation ... | 1,440 00 | |

| Previous year Rs. nP. | PROPERTY AND ASSETS | Amount Rs. nP. | Total Rs. nP. |
|---|---|---|---|
| 1,10,356 52 | 1. CASH:- In hand ... | | 1,12,369 75 |
| | 2. BALANCES WITH OTHER BANKS (showing whether on Deposits or Current Account):— | | |
| 73,484 04 | i. In Current Account ... | 1,38,570 58 | |
| 1,09,000 00 | ii. In Deposit Account ... | 1,00,000 00 | 2,38,570 58 |
| 1,82,484 04 | i In India 2,88,570-58 | | |
| | ii Outside India Nil | | |
| | 3. MONEY AT CALL AND SHORT NOTICE ... | | 50,000 00 |
| 1,69,468 75 | 4. INVESTMENTS AT COST ... | | 1,64,468 75 |
| | i Securities of the Central and State Government Market Value of Government Securities Rs. 1,63,872-50 Face value Rs. 1,65,000-00 | | |
| | ii Shares (classifying into preference ordinary deferred and other classes of shares showing separately shares fully paid up and partly paid up) Nil | | |
| | iii Debentures or Bonds Nil | | |
| | iv Other Investments in India Staff Security deposits invested in Scheduled Bank: | | 9,000 00 |
| | v Gold Nil | | |
| | 5. ADVANCES: (Other than bad and doubtful debts for which provision has been made to the satisfaction of the Auditors.) | | |
| 4,03,618 62 | I. Loans, Cash Credit, Overdraft, etc., | | 4,39,842 70 |
| | i In India 4,39,842 70 | | |
| | ii Outside India Nil | | |
| | II. Bills discounted and purchased: | | |
| | i Payable in India Nil | | |
| | ii. Payable outside India Nil | | |
| | PARTICULARS OF ADVANCES:— | | |
| | i Debts considered good in respect of which the Banking Company is fully Secured ... | 4,39,842 70 | |
| | ii Debts considered good for which the Banking Company holds no other Security than the Debtors' Personal Security Nil | | |
| | iii Debts considered good, secured by the Personal Liabilities of one or more parties in addition to the Personal Security of the Debtors Nil | | |
| | iv Debts considered doubtful or bad (not fully provided for) Nil | | |
| | v Debts due by the Directors or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons (fully secured) Rs. 101-37 | | |
| | vi Debts due by Companies or firms in which the Directors of the Banking Company are interested as directors, Partners or Maning Agents or in the case of Private Companies as members Nil | | |
| | vii Maximum Total Amount of Advances including Temporary Advances made at any time during the year to Directors or Managers or Officers of the Banking Company or any of them either severally or jointly with any other persons Rs. 101-37 | | |
| | viii Maximum Total Amount of Advances including Temporary Advances granted during the year to the Companies or Firms in which the Directors of the Banking Company are interested as Directors, Partners or Managing Agents or in the case of Private Companies as Members. Nil | | |
| | ix Due from Banking Companies Nil | | |
| | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION (AS PER CONTRA) ... | | |
| | i Payable in India Nil | | |
| | ii Payable outside India Nil | | |
| | 7. CONSTITUENTS LIABILITIES FOR ACCEPTANCES | | |
| | Endorsements and other obligations as per contra Nil | | |
| | 8. PREMISES LESS DEPRECIATION Nil | | |

**The Trichinopo**
**Vysya Bank Lin**
**Trichinopoly.**

ESTD. 1931

Twenty-eighth Report of Board of Directors to be pla before the Annual Ge Meeting of the Shareholders be held at 3-30 P. M. on W nesday the 9th March 60 at Registered Office of the Bank No. 65, Big Chetty Street, Tiruchirappalli.

The Board of Directors have pleasure in submitting herewit the audited Balance Sheet Profit and Loss Statement the Auditor's Report for year ending 31—12—59. Directors propose to appr the net profit of Rs. 17 nP. as follows:—

(a) Dividend at 5½% on the paid up Capital Rs. 5
(b) Reserve Fund as per Sec. 17 of the Banking Companies Act 1949. Rs. 3
(c) Incometax Reserve Rs. 7
(d) Legal Adviser's fees Rs.
(e) Bonus to Staff Rs.

Rs. 17,

1. The forfeited shares teen in number, hav re-issued for Rs. 805. T up value of the thirteen viz Rs. 650, at Rs. 50 share has been credited Paid uy Capital account balance of Rs. 155 has taken to the General R Fund. The value of th feited Shares viz Rs. 325 also been taken to the Reserve.

2. Owing to the market valu curities the

| Previous year Rs. nP. | LIABILITIES | | Rs. nP. |
|---|---|---|---|
| 523 57 | vii. Charity Fund ... | 498 57 | |
| Nil | viii. Provision for Income Tax ... | 170 75 | |
| 2,740 37 | ix. Provision for Bad Debts ... | 2,740 37 | |
| | x. Provision for Security Depreciation... | 1,440 00 | 24,745 30 |
| | 8. ACCEPTANCES — ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS PER CONTRA Nil | | |
| | 9. PROFIT AND LOSS : | | |
| 16,595 70 | Profit as per last Balance Sheet ... | 16,595 70 | |
| | Less Appropriations thereof :— | | |
| | (a) Dividends 4,967-50 | | |
| | (b) Reserve fund as per sec. 17 of the Banking Companies Act 1949 3,581-00 | | |
| | (c) Income-tax Reserve 7,161-45 | | |
| | (d) Legal Adviser's Fees 100-00 | | |
| | (e) Bonus to Staff 785-75 | | |
| | Rs. 16,595-70 | | |
| | 10. ADD PROFIT FOR THE YEAR BROUGHT FROM THE PROFIT & LOSS ACCOUNT | | 17,857 85 |
| 85,919 75 | TOTAL ... | | 10,34,111 25 |

| Previous year Rs. nP. | ASSETS | | Rs. nP. |
|---|---|---|---|
| | 7. CONSTITUENTS LIABILITIES FOR ACCEPTANCES | | |
| | Endorsements and other obligations as per contra Nil | | |
| | 8 PREMISES LESS DEPRECIATION :— Nil | | |
| | 9. FURNITURE & FIXTURES less depreciation : | | |
| 4,788 38 | Original cost till last year ... | 4,788 38 | |
| ... ... | Additions during the year ... | ... ... | |
| 3,501 45 | Less Depreciation to date ... | 3,578 45 | |
| 1,286 93 | | | 1,209 93 |
| | 10. OTHER ASSETS INCLUDING SILVER: | | |
| 6,393 89 | i. Income-tax Advance ... | 5,297 05 | |
| 1,300 00 | ii. Stock of Books and Forms ... | 1,013 00 | |
| 10 00 | iii. Court expenses recoverable partially (provision made, for the entire amount) Nil | | |
| 100 00 | iv. Rent Advance ... | 100 00 | |
| 9,144 39 | v. Interest receivable on loans and investments ... | 10,034 34 | |
| 1,753 61 | vi. Incometax deducted at source on Interest on Government securities ... | 2,202 15 | |
| 3 00 | vii. Suspense : Value of Postage stamps ... | 3 00 | 18,649 54 |
| | 11. Non-Banking assets acquired in satisfaction of claims: nil (Stating mode of valuation) | | |
| | 12. PROFIT & LOSS : | | |
| | Note : National Savings Certificates for Rs. 10,000 and Ten Year Treasury Savings Certificates for Rs. 15,000 are earmarked for Staff-Provident Fund | | |
| 8,85,919 75 | TOTAL ... | | 10,34,111 25 |

2. Owing to the market valu... curities, the L... decided to retain Rs. ... as "Provision for Secur... preciation" and treat the balance of Rs. 3,500 as 'R... Similarly the Bad Debts R... of Rs. 2,740-37 has been ... as Provision for Bad ... These two amounts Rs. ... 2,740-37 have been show... the head "Other Liabilit...

3. Eleven Meetings ... Board of Directors hav... called for and conducted.

4. Messrs K. M. ... rajulu Chettiar, N. A... yana Chettiar and M. S. ... namurthy Chettiar a... retiring directors by ... this year and they are ... for re-election.

5. The directors tha... members and the pub... their kind partrona... solicit the same Co-oper... the coming year al... directors further reque... members to attend the n...

(On behalf of the Boa... Directors.)

(ஒப்பம்) மோதி.
ஸ்ரீராமுலு செட்டி
Presiden...

(Authorised by the Board)

Tiruchirappalli, 27—1—60

## Profit and Loss Account for the 28th year ended 31st December 1959

| Previous year Rs. nP. | EXPENDITURE | | Amount Rs. nP. | Previous year Rs. nP. | INCOME (Less Provision made during the year for bad & doubtful debts & other Usual or necessary provisions. | Amount Rs. nP. |
|---|---|---|---|---|---|---|
| 8,905 46 | 1. Interest paid on Deposits, Borrowings, etc., ... | | 34,214 83 | 62,200 60 | 1. Interest and Discount ... | 69,400 03 |
| | 2. Salaries and allowances and Provident Fund to Staff | | | 872 83 | 2. Commission, Exchange and Brokerage ... | 59 88 |
| 2,348 71 | (i) To the Executive Officer-Secretary | Rs. 2,793-46 | | | 3. Rents ... | |
| 10,295 30 | (ii) To the Staff | Rs. 10,990-17 | | | 4. Net Profit on sale of Investments, Gold and Silver, Land, premises and other assets (not credited to Reserve or any Particular Fund or account) ... | |
| 12,644 01 | | | 13,783 63 | | 5. Net Profit on revaluation of Investments, Gold & Silver, Land premises and other assets (not credited to reserves or any Particular Fund or Account) ... | |
| 790 00 | 3. Directors' and Local Committee Members fees and Allowances ... | | 840 00 | | 6. Income from non Banking assets and Profit from sale of or dealing with such assets. ... | |
| 1,593 37 | 4. Rent, Taxes, Insurance, Lighting etc., ... | | 1,339 12 | 489 13 | 7. Other Receipts ... | 480 42 |
| | 5. Law Charges ... | | | | 8. Loss (if any) | |
| 130 10 | 6. Postage, Telegrams and Stamps ... | | 101 57 | | | |
| 300 00 | 7. Auditor's Fees ... | | 250 00 | | | |
| 81 00 | 8. Depreciation on and Repairs to the Banking Company's Property ... | | 77 00 | | | |
| 648 10 | 9. Stationery, Printing, Advertisement, etc., ... | | 931 20 | | | |
| | 10. Loss from Sale of or dealing with non Banking assets ... | | | | | |
| | 11. Other Expenditure :— | | | | | |
| 40 00 | (i) Filing Fees | Rs. 20-00 | | | | |
| 526 07 | (ii) Contingencies | Rs. 525-13 | 545 13 | | | |
| 308 75 | (iii) Income-tax paid | Nil | | | | |
| 595 70 | 12. Balance of Profit ... | | 17,857 85 | | | |
| 562 56 | Total Rs. ... | | 69,940 33 | 63,562 56 | Total Rs. ... | 69,940 33 |

...chirapalli, ...—1—1960.

மோதி ஸ்ரீராமுலு செட்டி,
பிரசிடெண்ட்.

P. M. Thammanna Chetty, N. Ramalingam Chetty,
Mothi R. Rajamannar Chetty, M. S. Krishnamurthy Chetty,
N. Athinarayana Chetty, K. M. Varadharajalu,
T. R. Sriramulu Chettiar, R. Rengaraju Chettiar
Directors.

M. S. Kumaravelu,
Accountant.

A. Krishnamurthi, B.A...
Secretary.

**Auditor's Report** :— I have audited the above Balance Sheet of the Trichinopoly Vysya Bank Limited, Trichinopoly, as at 31—12—1959 and also the Profit and Loss Account of the Bank for th... ...ed on that date and report that :—

(1) I have obtained all the information and explanations, which to the best of my knowledge and belief, were necessary for the purpose of my audit and have found them to be satis... ...) The transactions of the Bank which have come to my notice, have been within the powers of the Bank. (3) In my opinion, proper books of account as required by law have been kept by the Bank so ...ppears from my examination of those books. (4) The Bank's Balance Sheet and Profit & Loss account dealt with by this report are in agreement with books of account and (5) In my opinion and to the best ...nformation and according to the explanations given to me, the said accounts give the information required by the Companies Act, 1956 in the manner so required for Banking Companies and on such basis t... ...alance Sheet gives a true and fair view of the state of affairs of the bank as at 31—12—59 and the Profit & Loss account gives a true and fair view of the Profit for the year ended upon that date.

Tiruchirappalli,
23—1—1960.

A. GANESA IY...
Chartered Accountant,
Tiruchirappalli.

# அவர்கள் சொல்லுகிறார்கள்



### இரண்டும் இழிவே

"பணக்காரர்களின் படாடோபத்தையும் ஏழைகளின் வறுமைப் பிணியையும் நான் வெறுக்கிறேன். இரண்டும் இழிவானவை. எல்லோருடைய வாழ்க்கைத்தரமும் உயர்வதையே நான் விரும்புகிறேன்.

"பணம் தரத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு அல்ல. ஓரளவுக்கு அது ஓர் உபயோகமான பொருளே. பணத்தின் முக்கியத்துவத்தை நான் மறுக்கவில்லை. பிறகு தனி நபரின் தரத்தை அது பாதிக்கும்."

— புதுடில்லியில்
நேருஜி

### அரசாங்கத்தின் ஆசை

"அத்தியாவசியப் பண்டங்கள் எல்லாம் பாமரமக்களுக்கு நியாயமான விலையில் கிடைக்கவேண்டும் என்பதே அரசாங்கத்தின் விருப்பம்; இது சாத்தியமென்றே நான் நம்புகிறேன்."

— சென்னை மேல்சபையில்
திரு. சி. சுப்பிரமணியம்

### எல்லோருக்கும் வேலை

"படித்து வேலையில்லாமல் இருப்பவர்களின் எண்ணிக்கை மிகுந்திருப்பதால் புதியபள்ளிகள் கல்லூரிகளைத் திறந்து பயனில்லை என்ற கருத்து நிலவுகிறது. இது. தவறு பல்வேறு திட்டங்களும் நிறைவேறும்பொழுது வேலையின்மை தீர்ந்துவிடும்"

— ஒண்டிப்புத்தூரில்
திரு. காமராஜ்

### சமாதானம் நிலைக்க

"மனித சமுதாயம் ஒன்றேயாகும்; ஜாதி நிற வேறுபாடுகள் இருக்கலாம்; செல்வாக்குகள் பல வகைப்படலாம். ஆனால் ஒரே அடிப்படை மனிதத் தன்மையையும், ஒரே உடலமைப்பையும் அது கொண்டுள்ளது. எல்லா நாடுகளிலுமுள்ள மக்களும் ஒரே மனித சமுதாயத்தைச் சேர்ந்தவர்களே. இந்த உணர்ச்சியுடன் சர்வதேச நிறுவனங்கள் பரஸ்பர நல்லெண்ணத்திற்கும் [illegible] கும் பாடு[illegible]

"பொருளாதாரச் சுரண்டலும் இன அடக்கு முறையும் நீடிக்கும் வரை உண்மையான சமாதானம் நிலைக்காது."

— பம்பாயில்
டாக்டர் ராதாகிருஷ்ணன்

### நினைவுச் சின்னம்

இந்திய சுதந்திரப் போராட்ட வீரர்களுக்கு உகந்த "நினைவுச் சின்னம்" ஒன்றை ஏற்படுத்த வேண்டும் என்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். இம்மாதிரி நினைவுக் கட்டிடம் ஒன்றை புதுடில்லியில் கட்டுவது அரசியலாரின் தீவிர பரிசீலனையில் இருக்கிறது.

— மக்கள் சபையில்
அமைச்சர் திரு. தத்தார்

### கூட்டுறவின் பெருமை

நாம் கூட்டுறவைக் கைவிட்டுவிட முடியாது.; ஏனெனில் கூட்டுறவுகளே இந்திய விவசாயத்தின் முன்னேற்றத்துக்கான ஒரே நேர்மையான வழியாகும்.

கூட்டுறவு இயக்கம் கம்யூனிஸத்திற்கு இழுத்துச் செல்லும் என்பது ஒரு விசித்திரமான சிந்தனையைக் குழப்பும் விவாதமாகும்.

ஒவ்வொரு நாட்டிலும் முதலாளித்துவம் அல்லது கம்யூனிஸ்ட் கூட்டுறவு நடைமுறைக்கு ஒப்புக்கொள்ளப்பட்ட லட்சியமாகும்.

— புதுடில்லியில்
நேருஜி

### தொண்டர் சேவை

"காங்கிரஸ் தொண்டர்கள் வீடு வீடாகச் சென்று காங்கிரஸ் கட்சிக்குப் புதிய உறுப்பினர்களைச் சேர்க்கவேண்டும்; கருத்துவேறுபாடு உள்ளவர்களிடமும் சென்று காங்கிரஸ் கட்சியின் நல்ல திட்டங்களை எடுத்துச் சொல்லவேண்டும்"

திரு. காமராஜ்

### தமிழ் இனிய மொழி

"தமிழ்மொழி சீரும் சிறப்பும் வாய்ந்த இனிய மொழி; பல்லாயிரக்கணக்கான மக்கள் குழுமியுள்ள இந்த இடத்தில் அழகிய தமிழ் மொழியில் பேச இயலாமைக்கு நான் வருந்துகிறேன்"

# வளரும் விஞ்ஞானம்

### வெய்யில் விசையில் ஓடும் கார்.

வெய்யில் விசையில் ஓடும் புதிய கார் ஒன்று முதன்முதலாக நியூயார்க் நகரில் ஓடியது. 1912ம் வருடத்திய கார் ஒன்றின் மீது ஆயிரக்கணக்கான மணல் மின் கலங்கள் பொருத்தப்பட்டன. இந்த மின்கலங்கள் வெய்யிலை மின்விசையாக மாற்றுகின்றன. மின்விசை ஒரு கம்பி வழியாக 12 சாதாரண மின்சார உற்பத்திக் கலன்களில் பாய்கிறது. காரை ஓட்டும் மின்மோட்டாரைச் சுற்றுவதற்கு வேண்டிய விசை இந்த பாட்டரிகளிலிருந்து வருகிறது. மணிக்கு 20 மைல் ஓடும் இந்தக் காரை வெய்யில் விசையில் ஓடுவதற்கு அமைத்தது நியூயார்க்கில் உள்ள இண்டர் நேஷனல் ரெக்டிபையர் கார்ப்பொரேஷன் கம்பெனியாகும்.

### ஆளின்றி இயங்கும் இயந்திரம்.

30 ஆண்டுகளுக்கு முன்னர் சியாங்கே ஷேக் காலத்தில் பயனற்றவை என அரசாங்க காரியாலயத்தில் ஒரு மூலையில் குவிக்கப்பட்டிருந்த ஓர் இயந்திரத்தை எடுத்து அதில் 100 வித புதுமைகளைச் செய்துள்ளார் ஒரு தொழிலாளி.

இந்த இயந்திரம் கடைசல், துளை போடல் முதலிய வேலைகளைச் செய்கிறது. ஒரு ஸ்விட்சை அழுத்தினால் எல்லா வேலைகளும் தாமாகவே நடைபெறுகின்றன. இதனால் 18 மணி நேர வேலை 6 மணி நேரத்தில் முடிந்துவிடுகிறதாம்.

### ஆழ்கடலில் இயங்கும் ஆய்வுக் கூடம்.

ஆழ்கடலில் 750 மீட்டர் ஆழத்துக்கு ஆராய்ச்சியாளர்களை எடுத்துச் செல்லக்கூடிய மாபெரும் மூழ்குக் கோளம் ஒன்று லெனின் கிராடில் தயாராகி வருகிறது. முற்றிலும் உலோகத்தால் ஆன இக்கோளம் 2·5 டன் நீருக்குச் சமமான பரிமாணமும் பெற்றுள்ளது. பல்வேறு பார்வைக் கருவிகளும், புகைப்படச் சலன [illegible] இதனுள் பொருத்தப்பட்டிருக்கும். எதிர்பாராத வகையில் ஏதேனும் அபாயம் நேர்ந்தால், கோளத்திலுள்ள ஆராய்ச்சியாளர் ஒரு பிடியைச் சுற்றினால் போதும். உடனே கோளம் மேலே உயர்ந்து நீர் மட்டத்துக்கு வந்துவிடும்.

இந்த மூழ்குக் கோளம் மிகவும் நம்பகமானதாகும் இது விரைவில் கட்டி முடிக்கப்பெற்று சோவியத் விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களிடம் ஒப்படைக்கப்படும்.

### விண்ணில் பறக்கும் ஆபரேஷன் அறை

விண்ணிலே பறக்கும் விமானத்திலேயே அவசரமான சத்திர சிகிச்சைகள் செய்து முடிக்கும் பொருட்டு, மாஸ்கோ சத்திர சிகிச்சைக் கருவி ஆராய்ச்சிக் கழகம் 'பறக்கும் ஆபரேஷன் அறை' ஒன்றைத் தயார் செய்துள்ளது. இதைக்கொண்டு வைத்திய ஹெலிகாப்டர் விமானத்தின் அறையிலேயே இனி ரண சிகிச்சை ஆபரேஷன் செய்யலாம். ஹெலிகாப்டர் விமானம் மலைகள், காடுகள் என்று பாராமல் எந்தப்பிரதேசத்திலும் இறங்கக் கூடியது. எனவே, இனி எவ்விடத்திற்கும் சென்று அவசர சத்திரசிகிச்சை தேவைப் படுவோருக்கு காலதாமதமின்றி உடனே சிகிச்சை செய்யலாம் இவ்வறையில்.

விசேஷ முறையில் ஏற்பாடு செய்யப்பட்ட சிகிச்சை மேஜை ஒன்றும் உணர்ச்சியை அகற்றுவதற்காக சாதனங்களும் இரத்தம் கொடுப்பதற்கான ஏற்பாடும் சத்திர சிகிச்சைக் கருவி மேஜை ஒன்றும் பொருத்தப்பட்டிருக்கும்.

இந்த முதலாவது 'பறக்கும் ஆபரேஷன் அறை' கிராஸ்னோயார்க் பிரதேசத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டிருக்கிறது.

### சூரிய சக்தியால் இயங்கும் குளிர்பதனம்

குளிர்பதன இயந்திரங்களை இயக்குவதற்கு சோவியத் யூனியன் ஏற்கனவே சூரிய சக்தியை உபயோகித்து வருகிறது என்று திரு. ஐ. ஐ. அடமார்ஸ்கி தெரிவித்தார். சோவியத் அர்மீனியாவில் இக்காரியத்துக்கு சூரியசக்தி பயன்படுத்தப்பட்டு வருகிறது என்றும், மீன், மாமிசம் மட்டுமல்லாது காய்கறிகளையும் பக்குவப்படுத்துவதில் இம்முறை வெற்றியடைந்துள்ளது என்றும் அவர் [illegible]ர்.

## அப்பாத்துரைக்கு

### கலைக் கழகப் பாராட்டு

பன்மொழிப் புலவரும் சென்னை பல்கலைக் கழகத் தமிழ் அகராதி உதவி ஆசிரியரும், சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவருமான திரு. கா. அப்பாத்துரை அவர்கட்கு திருச்சி நகர கலைக்கழகம் மார்ச் 27ந் தேதி மாலை 6 மணிக்கு திருச்சி தேவர் மன்றத்தில் வக்கீல் திரு. பி. ரெங்கசாமி ரெட்டியார் தலைமையில் ஒரு பாராட்டுக்கூட்டம் நடத்தியது.

துவக்கத்தில் இறை வணக்கத்தின்பின் பன்மொழிப் புலவருக்கு கலைக் கழகத்தின் சார்பில் பாராட்டிதழ் படித்தளிக்கப்பட்டது. பின்னர், திருவாளர்கள் பேராசிரியர் ரம்போலா மாஸ்கரனேஸ், சேதுமாணிக்கம், வி. திருமால், அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார், ஆர். நாகசுந்தரம், முடியரசன் ஆகியோர் பன்மொழிப்புலவரைப் பாராட்டிப்பேசினர். முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அனைவரையும் வரவேற்றுப்பேசினார்.

திரு. கா. அப்பாத்துரை அவர்கள் தமக்கு அளிக்கப்பட்ட பாராட்டுக்கு நன்றி தெரிவித்தார். நகர கலைக் கழகத்தின் சார்பில் புலவர் திரு. திருநாவுக்கரசு அனைவர்க்கும் நன்றி கூறினார். விழாமுடிவில், "ஆயிரம் பொய்" என்ற நகைச்சுவை நாடகத்தைக் கலைக்கழகத்தினர் திறம்பட நடித்துக் காட்டினர்.



### குளித்தலை டி. மு. கோ.

S. C. 1029 | 57 E. P. 53 | 60

கன்னியப்பபிள்ளை —வாதி

கருப்பண்ணபிள்ளை —பிரதிவாதி

ஷை ரெம்பரில் 18–4–60-ல் எல இஸ்தியார் கிஷ்கரிவை செய்ய நோட்டீசு வாய்தா ஏற்பட்டிருப்பதால் ஷை 18–4–60-ல் பிரதிவாதி தனக்குள்ள ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ள வேண்டியது அறியவும்.

R. வரதராஜன்
அட்வகேட்.

2 | 3559 | 2

### குளித்தலை டி. மு. கோ.

O. S. 143 | 59

முத்துக்காத்தான் முத்துராஜா —வாதி

மாரியாயி அம்மாள் வகையரு —பிரதிவாதிகள்

எல இஸ்தியாரில் கண்ட சொத்துக்கு மதிப்பு கிஷ்கரிவை செய்ய வாதி மனு கொடுத்து 18—4—60-ல் வாய்தா போடப் பட்டிருக்கிறது.

எஸ். அண்ணாத்துரை அய்யங்கார்
வாதிவக்கீல்.

1 | 3558 | 1

### தஞ்சாவூர் டி. மு. கோ.

O. P. 7/60

காமாக்ஷி அம்மாள் —மனுதார்

குஞ்சம்மாள் —எதிர்மனுதார்

வாதியின் புருஷனும் எதிர்மனுதாரின் தகப்பனுமான காலஞ்சென்ற T. P. வைத்தீஸ்வர அய்யரின் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தொகை ரூ. 1138க்கு தனக்கு வார்சு சாடிபிகேட் கிடைக்கவேண்டுமாய் செய்திருக்கும் மனு 11—4—60க்கு வாய்தா போட்டிருக்கிறது. அதற்கு ஆக்ஷேபனையுள்ளவர்கள் ஷை 11—4—60 தேதி காலை 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

T. சாமிநாத முதலியார்
அட்வகேட்,

3 | 3560 | 3

### இ. வ. தொ. சங்க சம்மேளனத் தலைவர்

இந்திய வர்த்தகத் தொழிலியல் சங்க சம்மேளனத்தின் தலைவராக திரு. எம். எம். முருகப்ப செட்டியார் தேர்ந் தெடுக்கப்பட்









Regd. No. M. 3398 SHIVAJI—Tamil Weekly 8—4—1960

# இறுதிவரை தமிழுக்கே தொண்டு செய்வேன்

## திருச்சியில் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை

திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கம், மார்ச் 27ந் தேதி மாலை ஆர். டி. சி. மாடியில், பன்மொழிப் புலவரும், சென்னை எழுத்தாளர் சங்கத் தலைவருமான திரு. கா. அப்பாத்துரை அவர்கட்கு, திரு. அ. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் ஒரு பாராட்டு விழா நடத்தியது.

தலைவர் திரு. ரெட்டியார் அவர்கள் பேசுகையில், திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் வரலாற்றிலேயே இது ஒரு திருப்புமுனை என்றும் எங்கள் சங்க ஆண்டுவிழா முதலியவற்றிற்கு சென்னை தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராக இருப்பவர்களை அழைப்பதில்லை எனினும் தமிழுக்கும் தமிழர்க்கும் தமிழகத்திற்கும் உழைக்கின்ற நல்லவர்களையும், பேரறிஞர்களையும் பாராட்டி மரியாதை செய்ய நாங்கள் என்றைக்கும் தயங்க மாட்டோம் என்றும், இந்த மண் நன்றிமறவாத மண் என்றும், பன்மொழிப் புலவர் அவர்கட்கு நாங்கள் அளிக்கும் பாராட்டு இதுதான் என்று கருதிக்கொள்ள வேண்டாம், விரைவில் இங்குள்ள தமிழ்ச் சங்கம், நமது எழுத்தாளர் சங்கம் ஏனைய சங்கங்கள் அனைத்தும் இணைந்து ஒரு மகத்தான வரவேற்பு நடத்துவதற்கு இது ‘பிள்ளையார் சுழி’யே ஆகும் என்றும் குறிப்பிட்டார்.

‘முத்தமிழ்க் காவலர்’ திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் பன்மொழிப்புலவரை அறிமுகம் செய்து வைக்கும் முறையில் ஓர் அரிய சொற்பொழிவாற்றினார்.

‘உலகில் தோன்றிய முதல் மொழி தமிழ்; பிறமொழிகளில் இன்று கூறப்படுகிற கருத்துக்கள், தமிழில் 2000 ஆண்டுகளுக்கு முன்பே கூறப்பட்டவை. தமிழின் பெருமை உலகம் முழுவதும் சரிவரப் பரவாமலிருப்பதற்குக் காரணம் நாம்தான். தமிழை ஆராய்ந்து உணர்ந்த தமிழறிஞர் பலருக்கு ஆங்கிலம் தெரியாமலிருக்கிறது. தமிழும் ஆங்கிலமும் தெரிந்தவர்களுக்கு, தமிழின் பெருமையை வெளிநாடுகளுக்குச் சென்று பரப்பவேண்டும் என்ற உணர்ச்சி இருப்பதில்லை. தமிழ்ப் புலமையும், ஆங்கில அறிவும், தமிழ் உணர்ச்சியும் உள்ளவர்களாக இருந்தால், அவர்களுக்கு வெளிநாடு செல்லும் வாய்ப்புக் கிடைப்பதில்லை. அந்தக்குறை திரு. அப்பாத்துரை அவர்களால் தற்போது நீங்கவிருக்கிறது. அப்பாத்துரையார் விரைவில் மனைவியுடன் ரஷிய நாட்டுக்குச்சென்று தமிழின் பெருமையைப் பரப்ப இருக்கிறார்கள் வெறும் பொழுதுபோக்குக்காக எழுதப்படுவது அல்ல இலக்கியம். உழைக்கவே நேரம் போதாத நாடு இது! எனவே, சாகாவரம்பெற்ற இலக்கியங்களை எழுத்தாளர்கள் உருவாக்கவேண்டும். சிறந்த தமிழ் இலக்கியங்களை பிறமொழியில் மொழிபெயர்ப்பதுதான் தமிழ் எழுத்தாளர் செய்ய வேண்டிய முதல் தொண்டு’ இவ்வாறு திரு. கி.ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் குறிப்பிட்டார்.

பாராட்டுக்கு நன்றி தெரிவித்துப் பேசிய பன்மொழிப்புலவர், எழுத்தாளர் கடமையையும், இலக்கியத்தின் இலக்கணத்தையும் அழகுற எடுத்துக்கூறினார். அவர் கூறிய கருத்துக்களில் சில :—

இலக்கியம் தனிப்பட்ட எவருக்கும் சொந்தமானது அல்ல. மக்களின் பொதுச்சொத்து அது. இலக்கியம் உருவாக்க விரும்பும் எழுத்தாளர்கள், வெறும் நாவல் சிறுகதைகளை மட்டும் எழுதினால் போதாது. எல்லா நாவல்களும், சிறுகதைகளும் இலக்கியங்கள் ஆகிவிட மாட்டா. ஷேக்ஸ்பியர், டால்ஸ்டாய் போன்றோரும் எழுத்தாளர்கள்தாம். ஆனால் அவர்கள் உருவாக்கியவை உலக அரங்கில் பெருமைபெற்று விளங்குகின்றன. பாடப்புத்தகங்களில் அவர்களுடைய எழுத்துக்களைச் சேர்க்கிறார்கள். அத்தகைய புகழும், தகுதியும் பெறும் விதத்தில் தமிழ் எழுத்தாளரின் படைப்புகள் அமையவேண்டும். தமிழகத்தில் ஷேக்ஸ்பியர்களும், டால்ஸ்டாய்களும் தோன்றவேண்டும்.

“எழுத்தாளர் புலவரிவர் இருவர்க் குள்ளே
ஏற்றத்தாழ் வில்லை;அவர் ஆணும் பெண்ணும்!”

புலவர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும் பூசல் இருந்து வருகிறது. இது தேவையில்லாத வீண் சர்ச்சை. எழுத்தாளர் அனைவரும் புலவரல்லர்; புலவர் அனைவரும் எழுத்தாளர் அல்லர். எழுத்தாளர் சிலர் புலவராக உள்ளனர்; அதுபோல புலவர் சிலர் எழுத்தாளராக உள்ளனர். பணத்தைச் சம்பாதித்து வரும் ஆண்களைப்போன்றவர்கள் இலக்கியத்தை உருவாக்கும் எழுத்தாளர்கள். ஆண் கொண்டு வந்து தருகிற பணத்தை தகுதியறிந்து செலவுசெய்யும் பெண்களைப் போன்றவர்கள், இலக்கியத்தைப் படித்துத் திளைத்து மக்களுக்கு எடுத்துச்சொல்லும் புலவர் பெருமக்கள். ஆணும், பெண்ணும் ஒன்றுபட்டு வாழ்வதே வாழ்வுக்கு வழி. அது போல் எழுத்தாளரும், புலவரும் ஒற்றுமையுடன் இலக்கிய வளமைக்கு வழிவகுக்க வேண்டும். எழுத்தாளன் முக்கியமா? புலவன் முக்கியமா என்ற பயனற்ற சர்ச்சையில் காலம் கழிக்க வேண்டாம்.

தமிழின் பழமையை, பெருமையை உலகம் இன்னும் உணரவில்லை. தமிழ் என்று ஒரு மொழி இருக்கிறது என்பது, வெளிநாடுகளில் உள்ள பலருக்குத் தெரியாது. அவ்வளவு ஏன்? இந்தியாவில் உள்ள சில மாநில மக்களுக்குக்கூட தமிழ் பற்றித் தெரியாது! ஏன் இந்தநிலை? நினைத்துப்பார்த்தால் வேறு யார்மீதும் குற்றம் சொல்லத்தோன்றவில்லை. இப்பழிக்குக் காரணம் தமிழனே. தமிழின் பெருமையை தமிழனே வெளியில் சொல்லத் தயங்குகிறான். பிறமொழிகளுடன் தமிழையும் ஒப்பிட்டு, ‘உன்மொழியை விட என் மொழி உயர்ந்தது; பழமையானது’ என்று துணிந்து கூறத்தயங்குகிறான். பிறமொழியாளனின் மனம் புண்பட்டு விடுமோ? என்ற எண்ணமே இத்தயக்கத்துக்குக் காரணம். இத்தகைய எண்ணத்தைத் தமிழன் விட்டொழிக்க வேண்டும் சமயம் கிடைக்கும் போதெல்லாம் தமிழின் பெருமையை முரசு கொட்டவேண்டும்.

இந்திய நாட்டில் சமஸ்கிருதத்தை மதிக்கும் அளவுக்கு தமிழை மதிக்க மறுக்கிறார்கள். தமிழும் சமஸ்கிருதம் போன்றே பழைய மொழி. இதை நிரூபித்துக் காட்ட வேண்டும். சமஸ்கிருதம் தற்போது அதிகம் பரவியில்லாவிடினும், அழிந்துவிட வில்லை. தஞ்சை ‘உருட்டுசட்டி பொம்மை’ போல, எவ்வளவுதான் கீழே சாய்ந்தாலும், மீண்டும் நிமிர்ந்து கொள்ளும் தன்மை வாய்ந்தது! அது என்றைக்கும் வாழக்கூடிய மொழி.

உலகத்தின் எந்த மூலையில் ஒரு சிறந்த மொழியோ, இலக்கியமோ இருந்தாலும், அதை ஏற்றுக்கொண்டு உலகத்துக்கு அறிமுகம் செய்து வைக்கும் உயரிய பண்பு கொண்டது ஜெர்மன் நாடு. தமிழை ஜெர்மானியர்கள் உணர வேண்டும். அப்போதுதான் தமிழை உலகம் உணரும் வாய்ப்பு ஏற்படும். தமிழை ஜெர்மானியர்கள் ஏற்றுச் சிறப்புச் செய்யும் போதுதான், தமிழன் பெருமையை டெல்லியும் உணரும்! வெளிநாட்டார் எடுத்துக் காட்டிய பிறகுதான் எதையும் ஏற்பது என்ற வழக்கமும், பழக்கமும் நம்மவர்களை விட்டு இன்னும் அகலவில்லையே!

உலகில் தமிழ், சீன, ஜப்பான் மொழிகளைத் தவிர வேறு எந்த மொழியும் பழமையானவையல்ல. மற்ற எல்லா மொழிகளும் சுமார் 400 ஆண்டுகளுக்குள் தோன்றியனவாம்.

அண்மையில் ரஷ்யாவுக்குச் செல்ல இருக்கிற நான், எனது சுற்றுப்பயணத்தில் நான் எங்கெங்கு செல்லுகிறேனோ அங்கெல்லாம் தமிழின் தனிச்சிறப்பை எடுத்துக்கூறி, 1962-ல் நடைபெறும் உலகமொழிகள் மாநாட்டில், தமிழுக்கும் பிரதிநிதித்வம் கிடைக்கச் செய்ய முடியும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்; கடைசிவரை நான் தமிழுக்கே தொண்டு செய்வேன் என்று பலத்த கைதட்டுக்கிடையே பன்மொழிப் புலவர் குறிப்பிட்டார்.

சங்க கூட்டுச் செயலாளர் திரு. ஐ. சண்முகநாதன் நன்றி கூற விழா இனிது நிறைவெய்தியது.

…hed by Triloka Sitaram for Th… S… Printers, Tiruchi-2